REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 85630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: பங்குனி 15உ புதன் (28—3—56) ★ ★ வெளியூர்: பங்குனி 16உ வியாழன் (29—3—56) [இதழ் 244

## ஆடத் தெரியாதவள் தெரு கோணல் என்றாளாம்!

நிலப் படம் வரையத் தெரியாதவர் கரும்பலகை சிறிதென்கிறார்!

கர்னூல், மார்ச் 26—

"அனந்தபூர் மாவட்டத்திலுள்ள ஒரு ஆரம்பப் பள்ளியில், அங்குள்ள ஆசிரியர் ஒருவரை, அம்மாவட்டத்தின் நிலப்படத்தை வரையும்படி கேட்கப்பட்டதற்கு, அவ்வகுப்பில் வைக்கப்பட்டுள்ள கரும்பலகை, மிகச் சிறிதாக இருக்கிறது எனக் கூறி,

(4-ம் பக்கம் பார்க்க)

# குஜராத்தியர் மனக்கோட்டை நொறுங்குகிறது

## அந்தகோ! தமிழ் மகனே! இதுவா, உன் தலைவிதி?

### வடநாட்டு அகதிகளுக்கு வரவேற்பு! தமிழ்நாட்டு தரித்திரர்களுக்குப் பிரிவுபசாரம்!

*ஆங்கில ஏகாதிபத்தியம் அகன்றது! ஆனால் 'கூலி' என்ற இழிசொல் தமிழர்களுக்கு நிலைத்து நிற்கின்றது*

*தேயிலைக் காட்டுக்குக் கடத்திச் சென்றது வெள்ளை ஏகாதிபத்தியம்! அந்தமான் காட்டுக்கு அழைத்துச் செல்லுகிறது வடவர் ஏகாதிபத்தியம்!*

### கேட்பாரில்லையா? நீதி கோர தன்மானத் தமிழர் இல்லையா?

சென்னை, மார்ச் 27—

அந்தமான் தீவிலுள்ள காடுகளில் கூலி வேலை செய்ய, சென்னையிலுள்ள வேலைத் தேடித்தரும் நிறுவனம் தற்போது ஆள் திரட்டிக்கொண்டுள்ளதாம்!

இதுவரையில் 18 வயது முதல் 85 வயது வரையுள்ளவர்கள் சுமார் 600 பேர் பதிவு செய்து கொண்டுள்ளனராம். ஆனால், தேவைப்படுவது 300 தொழிலாளர்கள்தான் என்றும் செய்தி ஒன்று கூறுகிறது.

இரண்டு வருட ஒப்பந்தத்தின் பேரில் அவர்கள் அந்தமானுக்கு அனுப்பப்படுவார்களாம். அவர்களை அந்தமானுக்கு அனுப்புவதற்கு ஏற்பாடு செய்ய, ஏற்கனவே இந்தியப் பேரரசின் அதிகாரி ஒருவர் இங்கு வந்துள்ளாராம்.

## காங்கிரஸ் 'பத்வா' பொடிப் பொடியாகிறது!

### அது அங்கே! சென்னையில் அல்ல!

நாசிக், மார்ச் 28—

"பம்பாய் மாநிலத்தில் நாடகக் கலையை வளர்க்க சிறிய நகரங்களிலெல்லாம் திறந்தவெளி நாடக அரங்குகள் கட்ட அரசியலார் தீர்மானித்துள்ளனர். நடிப்புத்துறையிலீடுபட்டுத் திறமையும், தகுதியும் வாய்க்கப் பெற்ற நடிக, நடிகைகளுக்கு உபகாரச் சம்பளம் வழங்கவும் சர்க்கார் தீர்மானித்துள்ளனர்"

என்று, திறந்தவெளி நாடக அரங்கு ஒன்றைத் திறந்துவைக்கையில் பம்பாய் மாநில ரெவினியூ அமைச்சர் ஹீரே தெரிவித்துள்ளார்.

### உறுதியே உறுதி!

சென்னை, மார்ச். 27—

"நிலச் சீர்திருத்த விஷயத்தில் சென்னை சர்க்கார் உறுதியுடன் நடக்கும்; பின்வாங்காது"

என்று, சென்னை சட்டசபையில், நிதியமைச்சர் தெரிவித்தாராம்.

### மாராட்டிர காங்கிரஸ் தலைவர் கோரிக்கை செல்வாக்கிழக்கிறது!

### 25 ம. சட்டசபை உறுப்பினர் மசோதாவிற்கு எதிராக வாக்களிக்க முடிவு

பம்பாய் நகரை இணைக்கும் திருத்தத்தை ஆதரிக்க 19 உறுப்பினர்கள் உறுதி

### மற்றும்சில உறுப்பினர் நடுநிலைமை வகிக்கத் தீர்மானம்

### முதலமைச்சர் மொரார்ஜி முகத்திற்குக் கரிபூச்சு

மாகாணப் புனரமைப்பு மசோதாவை எதிர்த்து வேண்டுமானாலும் பேசலாம்; ஆனால், அவ்வெதிர்ப்பைச் செயல்படுத்தும் முறையில், மசோதாவிற்கு எதிராகக் காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்கள் வாக்களிக்கக்கூடாது என்ற கண்டிப்பான கட்டளை ஒன்றை காங்கிரஸ் மேலிடம் பிறப்பித்து இருக்கிறது.

(4-ம் பக்கம் பார்க்க)

# 'தமிழ் மக்களுக்குத் துரோகம் செய்யாதீர்'

## 'மக்களை மதிக்காத மதோன்மத்தர்களை மக்களும் மதிக்கப்போவதில்லை'

### 'கைகாட்டி காங்கிரஸ் உறுப்பினரை எதிர்காலம் சும்மா விட்டுவைக்காது'

*'தூய மனதுடன் பணியாற்றும் சர்வகட்சிக் கூட்டணி துப்பாக்கி முனைக்கு அஞ்சப்போவதில்லை'*

### ''தமிழ்நாடு' தேவையில்லை என்றால் 'தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி' என்ற பெயரை மாற்றுவதுதானே?'

### கூட்டணிப் பொதுக்கூட்டத் தீர்மானம்

"சென்னை ராஜ்யத்திற்குத் 'தமிழ் நாடு' என்று பெயர் வைத்தும், கேரள மாநிலத்துடன் சேர்க்கப்பட்ட எல்லைத் தமிழ்ப் பகுதிகளை தமிழ் நாட்டோடு சேர்த்தும், மாநிலப் புது அமைப்புச் சட்டத்தைத் திருத்தவேண்டுமென்று சட்டசபை உறுப்பினர்களையும், சர்க்காரையும் இக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது"

*என்று, தீர்மானம் ஒன்று பொதுமக்களின் ஒருமித்த ஆரவாரத்துடன் நிறைவேற்றப்பட்டது.*

### சென்னை சர்வகட்சிப் பொதுக் கூட்டத்தில் என். வி. நடராசன், ம.பொ.சி., ஜீவானந்தம், நல்லசிவம், கே. விநாயகம், சுயம்பிரகாசம், சுப்பிரமணியம், காஞ்சி-கல்யாணசுந்தரம்

சென்னை, மார்ச். 27—

"ஏகாதிபத்திய வெறி பிடித்து, தாங்கள் எது நினைத்தாலும் அதைச் செய்து முடித்துவிடலாம் என்ற ஆணவமும், துணிவும் கொண்ட மதோன்மத்தர்கள் அனைவரையுமே சர்வகட்சிக் கூட்டணியினர் நடத்திய அர்த்தால் விழிப்படையச் செய்துவிட்டது. 'நேரு பண்டிதர் நல்லவர்—நேர்மையானவர்' என்று முதலமைச்சர் காமராசர் கூடச் சொன்னார்; நாமும் நம்பினோம்; மாநிலப் புனரமைப்புக் குறித்த மசோதாவில் மக்களது கோரிக்கைகள் அனைத்தும் இடம் பெறும் என்றுதான் நம்பினோம். ஆனால், நாளைய தினம் சட்டசபையிலே வர இருக்கிற மசோதாவில் சர்வகட்சிக் கூட்டணி வலியுறுத்திய முக்கியக் கோரிக்கைகள் எதுவும் இடம் பெறவில்லை; நம்முடைய கோரிக்கைகளை மனிதாபிமானம் கொண்ட ஒவ்வொரு தமிழனும்—தமிழுணர்வு பொங்கி எழும் ஒவ்வொரு தமிழனும் ஒப்புக்கொள்ளத்தான் செய்வான். ஆனால் முதலமைச்சர் காமராசரோ, 'சென்னை ராஜ்யம்' என்ற பெயரை மாற்றி 'தமிழ் நாடு' என்று பெயரிட வேண்டுமென்ற நமது கோரிக்கை குறித்துக் கூறுகிறார்—'தமிழ் நாடு' என்ற பெயர் வேண்டாம்; 'சென்னை ராஜ்யம்' என்ற பெயரே இருக்கட்டும்; ஏனெனில், அகில உலகப் புகழ் பெற்றப் பெயராகிவிட்டது 'சென்னை' என்ற பெயர்,' என்று கூறுகிறார்.

"இவர் என்ன அகில உலகமும் சுற்றிவிட்டு வந்தவரா? இவருக்கு வெட்கமில்லையா, இப்படிச் சொல்வதற்கு? 'சென்னை மாநிலத்திற்குத் தமிழ் நாடு என்று பெயர் வைக்கத் தேவையில்லை' என்று அவர் கூறுவாரானால், இந்த மாநிலக் காங்கிரஸ் கமிட்டிக்கு மட்டும் ஏன், 'தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி' என்று பெயர் வைக்கப்பட்டிருக்கிறது? உண்மையிலேயே அவ

(4-ம் பக்கம் பார்க்க)

★

### நிகழ்ச்சிகள்

மாநிலப் புனரமைப்புக் குறித்த மசோதா குறித்து சர்வகட்சிக் கூட்டணியினர் தங்கள் கருத்தை விளக்கும்வகையில் 27—3—56 மாலை 6 மணியளவில் சென்னை ரோபியர் பூங்காவில், தமிழரசுக் கழகத் தலைவர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தலைமையில் கூட்டணிப் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. கூட்டத்திற்குத் தலைவராகத் தோழர் சிவஞானம் அவர்களை, சென்னை மாவட்ட தி. மு. க. துணைச்செயலாளர் கோ. செங்குட்டுவன் முன்மொழிந்தார்.

கூட்டத்தில் தோழர்கள் ப. ஜீவானந்தம், நல்லசிவம், கே. விநாயகம், எஸ். சுயம்பிரகாசம், ஏ. சுப்பிரமணியம், ம. பொ. சிவஞானம், காஞ்சி-கல்யாணசுந்தரம், என். வி. நடராசன் ஆகியோர் சொற்பொழிவாற்றினார்கள்.

கூட்டத்தின்போது, கூட்டணியின் சார்பில் பொதுமக்களிடம் நிதி திரட்டப்பட்டது. நிதி வசூலில் ரூ. 37—8—0 கிடைத்ததாக அறிவிக்கப்பட்டது.

இரவு சுமார் 9½ மணி அளவில் கூட்டம் கலைந்தது. (ந.-நி.)

### நியாய வார மசோதா: காமராசர் தகவல்

அடுத்த சட்டசபை (ஜூலை அல்லது ஆகஸ்டு) கூட்டத்தில் தான் பரிசீலனைக்கு வரும் என்றும், அதற்குள் 'செலக்ட் கமிட்டி' தனது பரிசீலனையை முடித்துக் கொண்டு அறிக்கை சமர்ப்பித்துவிடுமென்றும் முதலமைச்சர் காமராசர் கூறியுள்ளார்.

Best copy available.

நம் நாடு
தி.மு.க.தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 28—3—'56 புதன்

# முரணான போக்கு

மாகாண புனரமைப்பு மசோதா குறித்து, ஆளும் கட்சியான காங்கிரஸ், சட்டசபையில் எவ்வாறு நடந்துகொள்ளவேண்டும் என்பதைப் பற்றி, காங்கிரஸ் சட்டசபைக் கட்சி தனது சிறப்புக் கூட்டத்தில் ஆராய்ந்திருக்கிறது. சட்டசபைக் காங்கிரஸ் கட்சித்தலைவரான முதலமைச்சர் காமராசர் தலைமையில் அவ்வாய்வுக் கூட்டம் நடைபெற்று இருக்கிறது.

காங்கிரஸ் சட்டசபைக் கட்சியில் உள்ள மொத்த உறுப்பினர்கள் நூற்றி அறுபத்தொருவரில், தலைவர் உட்பட எழுபத்தாறு உறுப்பினர்களே கூட்டத்தில் கலந்துகொண்டுள்ளனர். மொத்த காங்கிரஸ் உறுப்பினர்களில் மூன்றில் ஒரு பகுதியினருக்குக் கொஞ்சம் கூடுதலான உறுப்பினர்கள்தான் கலந்துகொண்டுள்ளனர்.

பெரும்பான்மையான உறுப்பினர்கள் கூட்டத்தில் பங்கு கொள்ளவில்லை. வேறு சந்தர்ப்பங்களில் பெருந்தொகையினர் கலந்துகொள்ளாதது கருதத்தக்கதாக இல்லாது இருக்கலாம். பிரஸ்தாபக் கூட்டத்தில் பெரும்பான்மை உறுப்பினர்கள் கலந்துகொண்டு தங்கள் தங்கள் கருத்தை வெளிப்படையாகக் கூறத் தவறியது, மன்னிக்க முடியாத குற்றமேயாகும்.

பிரஸ்தாபக் கூட்டமோ மாகாண புனரமைப்பு மசோதா குறித்து ஆராய்ந்து முடிவுகட்டக் கூட்டப்பட்டக் கூட்டமாகும். தமிழ் நாட்டினுடையவும் தமிழ் மக்களுடையவும் எதிர்கால நலத்தை ஆணித்தரமாக எடுத்துக்காட்ட வேண்டிய ஒரு கூட்டத்திற்கு, பெரும் எண்ணிக்கையில் காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்கள் கலந்து கொள்ளாதது, அவ்வாறு கலந்துகொள்ளத் தவறிய உறுப்பினர்களின் பொறுப்பு—கடமை உணர்வு எவ்வாறு இருக்கிறது என்பதை விளக்குவதாகவே இருக்கிறது. இதைத் தமிழ்க் குடிமக்கள், தங்கள் நெஞ்சில் ஆழப் பதிய வைத்துக்கொள்ள வேண்டும்.

தமிழ் மக்களின் எதிர்காலத் தலைவிதியை நிர்ணயிக்கக்கூடிய மாகாண புனரமைப்புமசோதா பற்றி, தம் தம் கருத்தை அறிவிப்பதில் சற்றேறக்குறைய மூன்றில் ஒரு பங்கு உறுப்பினர்களுக்கு அக்கரை அல்லது ஆர்வம் குன்றி இருப்பதற்குரிய காரணங்கள், யாவை என்பது சிந்திக்கத்தக்கது.

ஆச்சாரியார் கோஷ்டி—காமராசர் கோஷ்டி என்ற இரண்டு கோஷ்டிகளாகக் காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்கள் பிளவுபட்டுக் கிடக்கின்றனர் என்பது, ஏற்கனவே வெளிப்படையாகத் தெரிந்துள்ள சாதாரண விஷயமாகும். மாகாணப் புனரமைப்பு விவகாரத்தையே பத்தோ அல்லது பதினைந்தோ ஆண்டுக் காலத்துக்குத் தள்ளிப் போட வேண்டும் என்ற ஆச்சாரியசுவாமியின் கோரிக்கை இடம் பெற்றில்லாத ஒரு மசோதாவை, ஆராயக் கூடும் கூட்டத்தில் கலந்து கொள்வதே மாபாவம் என்று அவர் கோஷ்டியைச் சேர்ந்த உறுப்பினர்கள், கூட்டத்தில் கலந்து கொள்ள ஒருப்படாது, ஒழிந்திருக்க வேண்டும்.

தங்கள் கருத்து ஒப்புக்கொள்ளப்படவா போகிறது; தாங்கள் கருத்து அறிவிப்பதே தலைவருக்கு எரிச்சல் தருவதாக அமைந்தாலும் அமையக்கூடும்; அதன் பலனாக தலைவரின் கோபத்திற்கு ஆளாக வேண்டிய கட்டாயம் ஏற்பட்டாலும் ஏற்பட்டுவிடும்; அதனால் பொதுத் தேர்தல் பட்டியலில் தங்கள் பெயர் விடுபட்டுப் போனாலும் போகும்; எனவே, கல்லைக் குத்துவானேன், கை வலி கண்டு வேதனைப்படுவானேன்—இரண்டும் வேண்டாம், எனச் சிலர், வரும்பொருள் அறிவதில் வல்லுநர்களாக, கூட்டத்தில் கலந்து கருத்தறிவிப்பதைத் தவிர்த்திருக்கக்கூடும்.

வேறு சிலர், நல்லெண்ணம் படைத்தவர், நல்லறிவு பெற்றவர், தங்கள் பேச்சு தலைவரின் காதில் விழவா போகிறது; தலைவரைத் தாங்கி இருப்பதையே பிறவிப் பயனாகக் கொண்டிருப்பவர்களின் ஆதரவு தங்கள் நல்லுரைக்குக் கிடைக்கவா போகிறது—என்றக் குழப்பத்தில், கூட்டத்தில் கலந்து கொள்வதிலும் கலந்து கொள்ளாது இருப்பது கோடி பெறும் எனக் கூட்டத்திற்குச் செல்லாமல் இருந்திருக்க வேண்டும்.

எத்தகைய நியாயங்களை எடுத்து விளக்கினாலும், எத்தனை முறை அவைகளையே திரும்பத் திரும்ப வலியுறுத்தினாலும், எவ்வளவுதாரந்தான் கரடியாகக் கத்தினாலும், தங்கள் கோரிக்கைகளை மதித்து ஒப்புக்கொள்ளும் பெருங்குணம் இந்திய அரசாங்கத்திற்கு ஏற்படவா போகிறது? எனவே, ஏன் தங்களுடைய அறிவையும், ஆவியையும் பன்றி முன் இட்டப் பவளமாக்க வேண்டும் என்று சில உறுப்பினர்கள் நினைத்து, அக்கூட்டத்தில் கலந்துகொள்ளாது இருக்கக்கூடும்.

இறுதியில், தலைவர் காமராசர் ஏவலுக்குக் காத்துக் கிடக்கும் எஞ்சிய உறுப்பினர்கள், கூட்டத்தில் கலந்துகொண்டனர்; தலைவர் கூற்றுக்கு மறுமொழி எதுவும் கூறாது அப்படியே ஆதரவு கூறிவிட்டனர்.

மாகாண புனரமைப்புக் குழு வெளியிட்ட அறிக்கையை எழுத்துக்கு எழுத்து நுணுகி சட்டசபை ஆராய்ந்து, தனது முடிவைத் தீர்க்கமாக அறிவித்துவிட்டிருப்பதால், இப்பொழுது மீண்டும ஒருமுறை மசோதாவை ஆராய்ந்து திருத்தம் செய்வதால் ஏற்படும் பலன் எதுவும் இல்லை; அப்படி ஆராய்வதும் முடிவற்ற விவாதத்தில்தான் முடிவுறும; எனவே, அப்படியே மசோதாவை நிறைவேற்றுவதுதான் தங்கள் நீங்காக் கடமையாகும் என்ற முடிவிற்கு சட்டசபை காங்கிரஸ் கட்சி வந்துவிட்டதாக, முதலமைச்சர் அறிவித்துள்ளார் எனச் செய்தி தரப்பட்டு இருக்கிறது.

'மதராஸ்' என்ற பெயரை மாற்றி 'தமிழகம்' அல்லது 'தமிழ் நாடு' எனப் பெயரிட வேண்டும் என்றத் திருத்தத்தை நிறைவேற்றுவதும் கூடாது என முடிவு கட்டப்பட்டுவிட்டதாம்!

'மதராஸ்' என்பது உலகறிந்த—ஊர் அறிந்த ஒன்றாக இருக்கும்பொழுது, வாழும் மக்களை உணர்த்தும்பெயர் எதற்கு எனக் காரணங் காட்டி, 'மதராஸ்' என்ற பெயருக்கு, பட்டம் சூட்டப்பட்டு விட்டதாக, முதலமைச்சர் அறிவித்துள்ளார் எனச் செய்தி தெளிவளிக்கிறது!

மாகாண புனரமைப்பு மசோதா விவகாரத்தில் ஆளும் காங்கிரஸ் கட்சி எவ்வாறு நடந்து கொள்ளப் போகிறது என்பது, சட்டசபை காங்கிரஸ் கட்சி முடிவுகளிலிருந்து ஐயத்திற்கிடமின்றி விளக்கமாகிவிட்டது. இனி, அவர்களுக்குப் பரிசளிக்கும் பணி ஒன்றுதான் எதிர்பார்க்க வேண்டிய தமிழ் நாட்டின் பெரும் பொறுப்பாக இருக்கிறது.

---

## இந்திய மாணவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள்

### இயந்திர-மின்சாரத் துறையில் வெளிநாடுகளில் அனுபவப் பயிற்சியளிக்கப்படுமாம்

தொழில் நுட்ப அனுபவத்துக்காக மாணவர்களைப் பரிவர்த்தனை செய்து கொள்வதற்கான சர்வ தேச சங்கத்தின் ஆதரவின்கீழ், 1956-57-ம் ஆண்டில இயந்திர நுட்ப, மின்சார எஞ்சினீயரிங் துறைகளில் அனுபவப் பயிற்சி பெறுவதற்காக ஜெர்மன், நெதர்லாந்து, யுகோஸ்லேவியா ஆகிய நாடுகள், இந்தியக் குடிமக்களுக்கு ஐந்து உபகாரச் சம்பளங்களை வழங்க முன்வந்துள்ளன. தெரிந்தெடுக்கப்படும் மாணவர்களுக்கு 9 மாத காலத்திலிருந்து 12 மாத காலம்வரை பயிற்சியளிக்கப்படும்.

---

## இந்திய மாணவர்களுக்கு ஓட்டல் தொழில் பயிற்சி

### வெளிநாடுகளுக்கு அனுப்பும் யோசனை ஆராயப்படுகிறதாம்

புதுடில்லி, மார்ச் 26—

இந்தியாவில் ஓட்டல் தொழில் பயிற்சி நிறுவனமொன்றை அமைப்பதற்கு ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறதாம். இதற்கிடையில், ஓட்டல் தொழிலில் பயிற்சி பெறுவதற்காக இந்திய மாணவர்களை வெளிநாடுகளுக்கு அனுப்புவதற்கானயோசனையொன்றை மத்தியப் போக்குவரத்து மந்திரி காரியாலயம ஆராய்ந்து வருகிறதாம்.

இந்தியாவில் ஓட்டல் தொழில் பயிற்சி நிறுவனமொன்றை ஏற்படுத்துவதற்குப் பூர்வாங்கமாகத் திட்டங்களை வகுப்பதற்காக வெளிநாட்டிலிருந்து நிபுணரொருவர் விரைவில் அழைக்கப்படுவார். அத்தகையதொரு பயிற்சி நிறுவனம் ஏற்படுத்தப்பட்ட பின்னர், இந்தியாவில் ஓட்டல் தொழில் நடத்துபவர்கள் தங்கள் நிறுவனங்களை நடத்துவதற்குத் தேவையான இந்திய சிப்பந்திகளைப் பெறுவது சாத்தியமாக இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது

---

## உங்களுக்குத் தெரியுமா?

கரும்புப் பயிரைத் தாக்கும் பூச்சிப்பொட்டுக்களை ஒழிப்பது பற்றி பிராந்திய நிலையங்களில் ஆராய்ச்சிகள் நடத்துவதற்காக, சுமார் ரூ 20 இலட்சம் செலவாகக்கூடிய பல திட்டங்களுக்கு இந்திய மத்திய கரும்புக் கமிட்டி அனுமதியளித்திருக்கிறது.

---

# 'ஜாதிப் பாகுபாடுதான் அடிப்படைத் தீமை'

## 'நமதுசமுதாயத்தில் அத்தீமை ஆழவேர் விட்டிருக்கிறது'

## 'எந்த மதத்தையும் அது சீரழித்துவிடும்'

'மத மாற்றத்தால் தீண்டாமை ஒழிந்துவிடாது'

## ஜெகஜீவன்ராமின் கருத்துரை

அகமதாபாத், மார்ச் 25—

"நிலவிவரும் ஜாதிப் பாகுபாடுதான் நமது நாட்டின் அடிப்படையான தீமையாகும் நமது சமுதாயத்தில் அத்தீமை ஆழ வேர்விட்டு இருக்கிறது. அத்தீமை எந்த மதத்தையும் சீரழித்துவிடும்.

"எனவே, ஜாதிப் பாகுபாடு அறவே களைந்தெறியப்பட வேண்டியது மிக மிக இன்றியமையாததாகும்.

"தீண்டாமைப் பிரச்சினை இன்னும் தொல்லை தரும் ஒன்றாக இருந்தபோதிலும், கடந்த சில ஆண்டுகளில் அது பெரிதும் இலகுவாக்கப்பட்டு இருக்கிறது என்றே நான் நம்புகிறேன்.

"மத மாற்றத்தால் தீண்டாமை ஒழிந்துவிடாது,"

என்று, மத்திய சர்க்கார் அமைச்சர் ஜெகஜீவன்ராம் குறிப்பிட்டிருக்கிறார்.

அவர், இங்கு ஒரு கூட்டத்தில் பேசிக்கொண்டிருக்கையில், 'அரிசனர்கள் புத்த மதத்தைப் பின்பற்றினால் சாதிப் பாகுபாடு முறை ஒழிய ஏதுவாகுமா?' என்று கேட்டபோதுதான், மேற்கண்டவாறு அமைச்சர் கூறியிருக்கிறார்.

மேலும் அவர், அரிசனர்கள் மதம் விட்டு மதம் மாறி விடுவதாலேயே மட்டும் தீண்டாமை ஒழிந்துவிடப் போவதில்லை என்றும், இந்தத் தீண்டாமைப் பிரச்சினை கடந்த சில வருட காலமாகப் பெரும் அளவில் துன்புறுத்தி வந்தாலும்கூட தற்போது அது மிக இலகுவாகத் தீர்த்துவிடக்கூடிய ஒரு நிலையை அடைந்துவிட்டிருக்கிறது என்றும், மேலும் ஒழித்துக் கட்டப் பொறுமையும், சமுதாய நல ஊழியர்களின் சலியா உழைப்பும் தேவை என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

---

## ரூ.52,50,000செலவில் பிரயாணிகள் நிலையம்

### சென்னைத் துறைமுகத்தில் கட்டப்படுகிறது

500 பேர் தங்குவதற்கான நவீன வசதிகள் கொண்டதாம்

சென்னை, மார்ச் 27—

சென்னை துறைமுக அபிவிருத்தித் திட்ட வேலைகளில் முக்கியமான சாமான், பிரயாணிகள் இரயில் வண்டி நிலையம் கட்டும் வேலை இன்று துவங்குகிறது.

ரூ 8 கோடி என்று இறுதியாக முடிவு செய்யப்பட்ட துறைமுக அபிவிருத்தித் திட்ட வேலைகளுள் முக்கியமான வேலை என்று கருதப்பட்ட இந்த இரயில் நிலையம் கட்டுவதற்கான செலவு ரூ. 52.5 இலட்சம் என்றும், அந்த நிலையம் சென்னை துறைமுகத்தின் வட பகுதியில் கட்டப்படும் என்றும் தெரிய வருகிறது.

அந்த நிலையத்தின் நீளம் 630 அடி என்றும், அகலம் 90 அடி என்றும், மொத்தப் பரப்பளவு 56,000 சதுர அடியாக இருக்கும் என்றும், ஏறத்தாழ 500 பிரயாணிகளுக்கு தங்கும் வசதி தரும் வகையில் அமைக்கப்படும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

இந்தப் புது நிலையம் கட்டுவதற்கான சிமிண்டினாலான களம் ரூ. 33 இலட்சம் பெறும் என்றும், அதனருகில் இரண்டு மின்சார பாரம் தூக்கும் இயந்திரங்கள் அமைக்க ரூ. 6 இலட்சத்திற்கும் அதிகமாகும் என்றும் தெரிகிறது.

மேலும் அந்த இரயில் நிலையம் இரட்டை மாடிகள் கொண்டதாகவும், அடித்தளம், சாமான்கள் இறக்கி வைக்கவும், ஏற்றவும் வசதிகள் கொண்டதாகவும், மேல்மாடி, புதுமாதிரியான முறையில் பிரயாணிகள் தங்குவதற்கு வசதி கொண்டதாகவும் அமைக்கப் பெறுமாம். கப்பலிலிருந்து இரயில் நிலையத்திற்கு வருகிறவர்களுக்கென, கப்பலிலிருந்து, மேல் மாடிக்கு 55 அடி நீளத்தில் பாலம் ஒன்று அமைக்கப்பெறும் என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இத்துடன் பிரயாணிக்குத் தேவையான வசதிகள் அனைத்தும் அடங்கப் பெற்றிருக்குமாம்.

இந்த நிலையம் கட்டும் வேலை இரண்டே ஆண்டுகளில் முடிவு பெற்றுவிடும் என்று எதிர்பார்க்கப்படுகிறதாம். அவ்வாறானால், வருகிற 1958-ம் ஆண்டுத் துவக்கத்திலேயே இந்த நிலையம் உபயோகத்திற்குக் கொண்டு வரப்படலாம் என்றும் தெரிகிறது.

இரயில் நிலைய அமைப்பு மட்டும் இரண்டு ஆண்டுகள் பிடிக்கும் என்றும், ரூ 8 கோடி செலவில் தயாரிக்கப்பட்ட சென்னைத் துறைமுக அபிவிருத்தித் திட்ட வேலைகள் அனைத்தும் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் கால இறுதியில் முடிவு பெறும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

---

## பாய்மரக் கப்பல்கள்

### இயந்திர விசைக் கருவிகளாக மாற்றியமைக்க முயற்சி

புதுடில்லி, மார்ச். 26—

பாய்மரக் கப்பல்களை இயந்திர விசைக் கப்பல்களாக மாற்றியமைத்து, அதன்மூலம் அவற்றின் இயக்கத் திறனை பெருக்குவதற்காக, அவற்றின் சொந்தக்காரர்களுக்குக் கடனுதவி வழங்குவது பற்றி, மத்தியப் போக்குவரத்து மந்திரி காரியாலயம் ஆராய்ந்து வருகிறதாம்.

இந்தத் தொழில் நாட்டின் போக்குவரத்து ஏற்பாட்டில் முக்கியமானதொரு இடத்தை வகித்து வருகிறது. தூத்துக்குடி, மசூலிப்பட்டணம், பம்பாய் ஆகியவிடங்களில் மூன்று பிராந்திய அதிகாரிகள் (பாய்மரக் கப்பல்கள் பிரிவு) நியமிக்கப்பட்டதற்குப் பின்னர், இந்தத் தொழிலின் பிரச்சினைகளில் மேலும் அதிகக் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

---

## கூட்டுறவு அடிப்படையில் சர்க்கரை ஆலைகள்

### ரூ. 5 கோடி ஒதுக்கப்பட்டதாக மக்கள் சபையில் அறிவிப்பு

புதுடில்லி, மார்ச் 26—

கூட்டுறவு அடிப்படையில் ஆரம்பிக்கப்படும் சர்க்கரை ஆலைகளின் மூலதனத்தில் பங்கு கொள்வதற்காக மாநில சர்க்காருக்குக் கடன் தொகைகள் வழங்க இந்திய சர்க்கார் ஐந்து கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கின்றனர் என்று மக்கள் சபையில் அறிவிக்கப்பட்டுள்ளது.



# தமிழின் தகுதியும் ஆங்கிலத்தின் அவசியமும் அறிவிக்கப்படுகிறது

## விஞ்ஞான அறிவு பெற இந்தி உதவவே உதவாது

## சென்னை அரசாங்கத்தின் மொழிக் கொள்கை

சென்னை, மார்ச் 26—

"தேசீய மொழியாக இந்தி மொழியை ஆக்குவதற்கெனக் குறிப்பிடப்பட்டுள்ள காலவரையான 1965-ம் ஆண்டு வரைக்கும், சென்னை மாநிலத்தைப் பொறுத்த வரையில், மாநிலத்தில் உள்ள எல்லாக் கல்லூரிகளிலும், பள்ளிகளிலும் தாய் மொழிதான் கட்டாய முதல் மொழியாக இருக்கும்; இரண்டாவது கட்டாய மொழியாக ஆங்கிலம் இருக்கும்; மூன்றுவது விருப்பப்பாட மொழியாக இந்தி மொழி இடம் பெறும்,"

—என்று சென்னை சர்க்காரால் இன்று வெளியிடப்பட்டுள்ள கல்வி பற்றிய 'வெள்ளை அறிக்கை'யில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

"கல்லூரிகளில் இரசாயனத் தொழில் துறைகளுக்கான பாட போதனைக்கு ஆங்கில மொழிதான் போதனு மொழியாக இருக்க முடியுமே தவிர, இந்தியால் முடியாது; அதுமட்டுமல்லாமல், நவீன கால எண்ணங்களை எளிதில்—நேரடியாகப் புரிந்துகொள்ளவும் ஆங்கில மொழியால்தான் முடியுமே தவிர, இந்தி மொழியினுல் முடியாது,"

—என்று, ஆங்கிலம் கட்டாய இரண்டாவது மொழியாகவும், இந்தி மூன்றுவது விருப்பப்பாட மொழியாகவும் இருக்கவேண்டியதற்கான காரணம் பற்றி அவ்வறிக்கையில் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

மேலும் அவ்வறிக்கையில் காணப்படுவதாவது:—

"இத்தகுக் காரியங்களுக்கெல்லாம் இந்தி மொழியைப் பயன்படுத்த அதை அபிவிருத்தி செய்தாகவேண்டும் என்பது உண்மைதான்; ஆனால், அதற்கும் முன்னலேயே தாய்மொழியையும் அபிவிருத்தியடையச் செய்தாக வேண்டும். எவ்வாறுனும், இந்த முடிவு இந்தக் காலத்திற்கும் — 1965-க்குமிடையே செய்யப்பட வேண்டிய நடைமுறைச் செயல்பாடுகளுக்கு வேறுபாடுகளை உருவாக்காது."

மேற்குறிப்பிட்ட காரணங்களையடக்கிய 'வெள்ளை அறிக்கை'யை, மாநில சட்டசபையில் கல்வி அமைச்சர் சி. சுப்பிரமணியம் சமர்ப்பித்திருக்கிறார்.

மாநிலத்திலுள்ள இடைநிலைப் பள்ளிகளிலுங்கூட இந்தி மொழி கட்டாயப் பாடமாக்கப்பட முடியாததற்குக் காரணம் என்ன என்பதற்குக் காட்டப்பட்டுள்ள காரணங்களாவன:—

"கட்டாயமாக ஒரு மொழியை இளைஞர்கள்மீது திணிப்பதின் விளைவு, கல்லூரிகளில் மேற்படிப்புக்குச் செல்ல முடியாமலும், கல்லூரிப் படிப்புப் பெற்றவர்களுக்கென மட்டும் ஒதுக்கப்பட்டுள்ள வேலைகளுக்குத் தங்களை ஈடுபடுத்திக் கொள்ள முடியாத ஒரு நிலையை — கடுந்தண்டனையை உருவாக்கி விடுகிறது; எனவே, இத்தகு தண்டனைக்குளுக்கு இளைஞர்களை ஆளாக்கி அவர்களைத் துன்புறுத்துவது அர்த்தமற்றதும், நேர்மையற்றதுமாகும்.

"இரண்டாவதாக, இந்தி மொழி கட்டாயப் பாட மொழியாக்க வேண்டுமென்று கூறப்பட்டதின் நோக்கமெல்லாம். அதிக அளவில் இளைஞர்கள்—மாணவர்கள் அம்மொழியைப் பயில முன்வருவார்கள் என்பதுதான். ஆனால் இம்முறையைக் கையாண்டால், அதனால் பலன் எதும் கிடைக்காதிருப்பதுகூட அல்ல; காலா காலத்தில் அம்முறை தோற்கடிக்கப்பட்டே ஆகிவிடும். ஏனெனில், அப்போது, 'இந்தி திணிக்கப்பட்டுக் கொண்டு வருகிறது' என்றக் கருத்து மக்களிடையே உருவாகிவிடும்; அதனால் இந்தி மொழி மீதே ஒருவித பகை உணர்ச்சி ஏற்பட ஏதுவாகிவிடும். அதற்கு மாருக, இந்தி மொழி எல்லாப் பள்ளிகளிலும் விருப்பப் பாடமாகவும், மற்றுமுள்ள செயல் முறைகள் அனைத்திலும் இந்தி மொழியை போதனு மொழியாக்குவதற்குத் தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக்கொள்வதாலும், அம்மொழி மீதுள்ள விருப்பத்தின் காரணமாகவேனும் அது சிறுகச்சிறுக மாநில முழுவதிலும் வளர்ச்சியடைந்துவிடும். இப்படி அம்மொழி விருத்தியடைய வேண்டுமென்று விருப்பப்பட்டால், இந்திய சர்க்கார், தங்களது நிர்வாக அலுவல்களில் வேலை தேடுவோர் இந்தி மொழியில் பள்ளித் தேர்வு பெற்றிருக்க வேண்டுமென்று நிபந்தனையிட்டால் கூட, மாணவர்கள், தாங்களாகவே முன்வந்து, தங்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற அவகாசத்தை நல்ல முறையில் பயன்படுத்திக்கொள்ளத் தவறமாட்டார்கள் என்பதில் சந்தேகமே இல்லை."

இவ்வாறே, மலையாள, கன்னட, ஆந்திர மாநிலங்களான தென் இந்திய மாநிலங்களிலும் அந்தந்த மொழியே அலுவல் மொழியாக ஆகும் என்ற நம்பிக்கை தெரிவித்து அவ்வறிக்கையில் மேலும் குறிப்பிடப்பட்டிருப்பதாவது:—

(4-ம் பக்கம் பார்க்க)

---

## பெண்கள் பீடி குடிப்பது அதிகரிக்கிறதாம்!

### கவலைப்படுகிறர் காங்கிரஸ் உறுப்பினர்

ஷில்லாங், மார்ச் 24—

"பீடி குடிக்கும் தீய பழக்கத்தை அசாமிலுள்ள அநேக பெண்கள் பின்பற்றியுள்ளனர்,"

என்று, அசாம் சட்டசபையில் வரிகள், தீர்வைகள் பற்றிய பிரரேபணை ஒன்று மீது விவாதிக்கையில் ஹேம் சந்திரா ஹஜாரிகா (காங்) வருத்தப்பட்டுக் கூறினாராம்.

பீடி குடிப்பதைத் தடை செய்ய வேண்டுமென்று சில காங்கிரஸ் உறுப்பினர்கள் வற்புறுத்தினர்களாம்.

பீடி உற்பத்தியாளர்கள், பள்ளி மாணவர்களிடையே இலவசமாக பீடிகளை விநியோகம் செய்கிறர்கள் என்றும், இளைஞர்களுக்கு கவர்ச்சி ஏற்படும்படி அவர்கள் பிரச்சாரம் செய்கிறர்கள் என்றும் விஸ்வதேவ் சர்மா என்ற காங்கிரஸ் உறுப்பினர் கருத்தறிவித்தாராம்.

தேசிய வாழ்வில் மதிப்பான இடத்தை வகித்துவந்த புறக்கணிக்கப்பட்ட 'ஹூக்கா' முறையைப் புதுப்பிக்க வேண்டுமென்றும், பீடி குடிப்பதை தடை செய்ய வேண்டுமென்றும், தேவைப்பட்டால் சட்டமே இயற்ற வேண்டுமென்றும் ஹஜாரிகா என்ற உறுப்பினர் கோரினாராம்.

வேண்டிய நடவடிக்கைகளை சர்க்கார் மேற்கொள்ளும் என்று, நிதியமைச்சர் மோதிராம் பரூரா உறுதியளித்துள்ளாராம்.

---

# இடைநிலைக் கல்விக் காலம் ஓராண்டு அதிகரிக்கிறது

## துவக்கக் கல்வி மாணவர்கள் ஏழு ஆண்டுகள் படித்தால் போதும்

## பள்ளித் துவக்க வயதை உயர்த்தத் திட்டம்

கல்வி முறை மாற்றம் குறித்து சென்னை சர்க்கார் 'வெள்ளை அறிக்கை' தரும் விளக்கம்

சென்னை, மார்ச் 26—

இந்தியக் குடியரசு தினமான ஜனவரி 26-ந் தேதி முதல், சென்னை மாநிலத்திலுள்ள பள்ளிகளில் சேரும் குழந்தைகளின் வயது 5-க்குப் பதிலாக 5½ ஆக இருக்க வேண்டுமென்று, சென்னை சர்க்கார் வெளியிட்டிருக்கிற கல்வி சம்மந்தமான வெள்ளையறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

இடைநிலைப் பள்ளிப் படிப்பின் காலவரையறையை மேலும் ஓராண்டுக்கு நீடிப்பதென்று இடைநிலைக் கல்விக் குழு விடுத்திருந்த சிபாரிசை சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிறது. இதையொட்டி, உயர்நிலைப் பள்ளி வகுப்புகளுக்குச் செல்லும் துவக்கக் கல்வி மாணவர்கள் இனிமேல் 8 ஆண்டுகளுக்குப் பதிலாக 7 ஆண்டுக் காலம் படித்தால் போதும் என்று மாற்றி அமைக்கப்பட்டிருக்கிறது.

இத்தகவல்கள் வெளியிடப் பெற்றுள்ள அவ்வறிக்கையில், இரண்டாவது திட்டக் காலத்தில் கல்வி அபிவிருத்தி குறித்துக் குறிப்பிடுகையில், 'கல்வி அபிவிருத்திக்கு அதிகமான பொருளாதார வசதி தேவை; இந்தப் பொருளாதார நிலையைச் சீர்ப்படுத்துவதற்கு மாணவர்—ஆசிரியர் விகிதாச்சாரத்தை உயர்த்துவதைத் தவிர வேறு உருப்படியான வழி எதுவும் இல்லை,' என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

அப்படி ஆசிரியர்—மாணவர் விகிதத்தை உயர்த்திப் பொருளாதார நிலையைச் சீர்ப்படுத்தும்போது தனிப்பட்ட கல்வி நிறுவனங்களுக்குத்தரப்படும் நிதி உதவியை நிறுத்திக்கொண்டு, தனிப்பட்ட நிறுவனங்களையும் பொது நிறுவனங்களாகவே எடுத்துக்கொள்ளவேண்டி வரும் என்றும் கூறப்பட்டிருக்கிறது.

பஞ்சாயத்துக்கள், மாவட்டக் கழகங்களின் மேற்பார்வையில் நிர்வகிக்கப்பட்டு வரும் பள்ளிகளையெல்லாம் கல்வி மண்டலக் குழுவின் நிர்வாகத்திற்கு விட்டுவிட வேண்டுமென்ற இடைநிலைக் கல்விக் குழுவின் சிபாரிசை சர்க்கார் மறுத்துவிட்டது.

மேலும், இந்தி மொழியை பள்ளிகளில் பயிற்றுவிப்பது குறித்த திட்டங்கள் ஆலோசிக்கப்பட்டு வருவதால் அடுத்த ஆண்டில் பள்ளிகளில் இந்தி மொழி குறித்து எவ்வித ஏற்பாடுகளும் செய்யவில்லையென்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இது குறித்து மேலும் குறிப்பிடப்பட்டிருப்பதாவது:—

"பள்ளிகளில் இந்தி மொழிப் பாடம் ஏற்படுத்துகிறபோது, அதற்குத் தேவையான ஏரானமான இந்தி மொழி ஆசிரியர்களுக்கு ஊதியம் தருவதற்கென ரூ. 28,50,000 ஒதுகக பொதுக் கல்வித்துறை அதிகாரி உத்தேசித்திருக்கிறர். ஒரு சில குறிப்பிட்ட மாறுதல்களுக்குப் பின்னர், 1956-57-ம் ஆண்டில் கல்வித் துறைச் செலவுகள் ரூ 125 இலட்சத்திற்குக் குறைக்க நேரிடும். இதனிடையில் முக்கியத் தேவையையொட்டி மேற்கொண்டு நிதி உதவிகள் தரப்படும்."

1956 — 57-ம் ஆண்டுக்கான திருத்தப்பட்ட கல்விச் செலவுக்கான திட்டங்களாவன:—

(1) ஆதாரப் பள்ளி உட்பட ஆரம்பக் கல்வித் திட்டங்கள்:—

1. ஆரம்பக் கல்வி ரூ. 20,46,900;
2. ஆதாரக் கல்வி ரூ 14,16,000;
3. ஆசிரியர்கள் ஊதியம், க்ஷேமகல நிதி, உயர்தர ஆரம்பப் பள்ளிகளில் வேலை செய்யும் செகண்டரி கிரேட் ஆசிரியர் சம்பளம் முதலியன ரூ. 1,00,000;

(2) இடை நிலைக் கல்வித் திட்டங்கள்:—

1. இடைநிலைக் கல்வி ரூ. 24,88,500;
2. 4 முதல் 6-வது பாரம்வரை படிக்கும் ஆசிரியர்கள், போலீசார், தலைமைப் போலீசார், கடைசித்தர ஊழியர்கள் ஆகியோரின் குழந்தைகளுக்கு இலவசக் கல்வி, சலம்பளச் சலுகை முதலியன ரூ. 5,00,000;

(3) உயர்தரக் கல்வி சம்பந்தமான திட்டச் செலவுகள்:—

1. என்ஜினீயரிங் போன்ற தொழில் அபிவிருத்தி ரூ. 26,00,000;
2. பயிற்சிப் பள்ளிகள், உடற் பயிற்சிக் கூடங்கள் போன்ற உயர்தரத் தொழில் துறை நிறுவனங்கள் ரூ 13,91,500;
3. உயர்தரக் கல்விக்காக மத்திய சர்க்காரால் நிதி உதவி பெறும் நிறுவனங்களின் அபிவிருத்திக்கான நிதி ரூ. 10,00 000;
4. 300 தொழில் துறை கல்லூரிகளில் வழங்குவதற்கான ஸ்காலர்ஷிப்புகள் ரூ. 56,000;

(4) மற்றையத் திட்டங்கள்:—

1. கல்வி தடைக்கப்பட்டிருக்கிற மக்கள் கல்வி நலம் பெற ரூ. 1,27,800;
2. முதியோருக்கான சமுதாயக்கல்வி ரூ. 1,00,000;
3. குழந்தைகளுக்கான இலக்கியக் கல்வி வளர்ச்சி ரூ 30 000;
4. படக்காட்சிக் கல்வி ரூ. 15,000;
5. பொருட்காட்சித் துறையில் ஆசிரியர் பயிற்சி ரூ. 2,800;
6. ஒதுக்கி வைக்கப்பட்ட தொகை ரூ. 6,25,500;

---

தலைமை நிலையச் செய்தி:

# மாநில மாநாடு

## பந்தல் அமைப்பு — 'ஸ்டால்' ஏற்பாடுகள்

மே—17, 18, 19, 20 ஆகிய தேதிகளில் திருச்சியில் நடைபெறவிருக்கும் தி. மு. கழக 2-வது மாநில மாநாட்டுக்கான பந்தல் அமைத்தல், 'ஸ்டால்'களை வாடகைக்கு விடுதல் ஆகிய ஏற்பாடுகளைக் கவனித்து ஆவன செய்ய மார்ச் 31, ஏப்ரல் 1, 2 ஆகிய தேதிகளில், அண்ணா, பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன் ஆகியோர் திருச்சியில் தங்கியிருந்து, வரவேற்புக் குழுத் தலைவர் அன்பில்-தர்மலிங்கம், செயலாளர் எம். எஸ். மணி, எஸ். முத்து உள்ளிட்ட மற்ற நிர்வாகிகளுடன் கலந்து முடிவு செய்வார்கள்.

ஏப்ரல் 1-ந் தேதி—பந்தல் அமைப்பது பற்றியும், 2-ந் தேதி—ஸ்டால்கள் வாடகைக்கு விடுவது பற்றியும் முடிவு செய்துவிடப்படும்.

எனவே, பந்தல் அமைக்க விரும்புவோரும், ஸ்டால்கள் வாடகைக்கு வேண்டுவோரும், முன்னதாகவே வரவேற்புத் தலைவர் அன்பில்-தர்மலிங்கம் அவர்களுடன் (9, கில்லேதார் தெரு, தெப்பக்குளம், திருச்சி) தொடர்புகொள்ள வேண்டுகிறோம்.

# ‘மக்களுக்குத் துரோகம் செய்யாதீர்’

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ருக்கு இந்த மனப்பாங்கு இருக்குமானல் ‘தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி’ என்ற பெயரை எடுத்துவிட்டு, ‘சென்னை மாநிலக் காங்கிரஸ் கமிட்டி’ என ஏன் மாற்றியிருக்கக் கூடாது? பொறுப்புணர்ச்சியும், நேர்மையும், நியாயமும் அவர்களிடத்திலே இருக்குமானல் இதைச் செய்திருக்கலாமே? அதைச் செய்யத் திறனில்லை—தைரியமில்லை; நம்மிடத்திலே வந்து சொத்தை வாதம் புரிகிருர். இப்படி நம்மிடத்திலே வாதம் புரிவதற்கான காரணம் எல்லாம், ‘அவர்கள் சொல்லி நாம் கேட்பதா?’ என்ற ஆணவத் திமிர் அவர்களை ஆட்டிப் படைப்பதுதான்!

“எனவேதான், நாம் அவர்களை எச்சரிக்கிறோம்—‘அமைச்சர்களே! நீங்கள் மக்கள் எண்ணத்தை மதிக்கவில்லை; ஜனநாயகத்திற்கு மாருக உங்கள் கட்சிக்காரர்களுக்கே வாய்ப்பூட்டுப் போட்டுவிட்டீர்கள். மக்களை மதிக்க மறுக்கும் உங்களையும், உங்கள் எஜமானர் நேருவையும் மக்கள் மதிக்க மறுத்து விட்டார்கள்’—என்று.”

—இவ்வாறு, தி. மு. கழகத் துணைப் பொதுச்செயலாளர் என். வி. நடராசன் அவர்கள், நேற்று மாலை சென்னை நேப்பியர் பார்க்கில் நடைபெற்ற சர்வ கட்சிக் கூட்டணிப் பொதுக்கூட்டத்தில் உரையாற்றுகையில் குறிப்பிட்டார்.

தொடர்ந்து அவர் பேசுகையில் கூறியதாவது:—

“சர்வ கட்சிகள் இன்றுவரையில் தங்கள் கொள்கைகளில் பேரம் செய்யவில்லை—கொள்கைகளை விட்டுக் கொடுக்கவில்லை ஆனல் உள்ளத் தூய்மையுடன் ஒன்றுபட்டு நிற்கிறது—பணிபுரிகிறது. அந்த ஒருமைப்பாட்டை நீங்கள் மதிக்க வேண்டாமா? நாங்கள் கேட்பது என்ன? தமிழகப் பகுதிகள் அனைத்தும் தமிழகத்துடன் இணைய வேண்டும்; ‘தமிழ் நாடு’ என்று பெயரிடவேண்டும் என்பதுதானே!

“ஆந்திர மாநிலத்தவர், ‘விசால ஆந்திரம்’ தேவையென்கின்றனர். தேபருக்கு முன்னர் நின்று ‘பெல்லாரியைத் திருப்பிக்கொடு’ என்று குரலெழுப்புகின்றனர்; மராட்டியத்திலே உள்ள தலைவர்கள் எல்லாம் போர்முரசு கொட்டி, பம்பாயை மராட்டியத்துடன் சேர்க்கவேண்டுமென்று மார் தட்டிப் பேசுகின்றனர்; இது போலவேதான் மற்றுமுள்ள எல்லா மாநிலத்தவர்களும் ஒருமுகமாகப் போர்க்கொடி உயர்த்தி விட்டார்கள். ஆனல் இங்கோ? தமிழகத்து மக்களின் வாக்குகளைப் பெற்றுக்கொண்டு சட்டசபை உறுப்பினர்களாக வந்திருக்கிற காங்கிரஸ் எம். எல். ஏ.-க்களெல்லாம் கை காட்டி மரங்களாகத்தான் இருக்கிருர்கள்.

“கூட்டணி அவர்களைப் பார்த்து, ‘இந்நோத்திலாயினும், இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்துக்கொண்டு மக்கள் குரலுக்குச் செவி சாய்த்து, மக்கள் தீர்ப்பை ஆதரியுங்கள்; மதோன்மத்தம் கொண்ட எதேச்சாதிகாரிகளின் தீர்ப்பை ஆதரிக்காதீர்கள்’ என்று கேட்டுக்கொள்கிறது.

“அப்படிச் செய்யத் தவறினல், இந்த மதிகெட்ட மந்திரிகளுக்கும் அவர்களது பரிவாரங்களுக்கும் நிச்சயம் தமிழக மக்கள் மதி புகட்டத்தான் போகிருர்கள். காமராசருக்கு நாம் தெரிவித்துக் கொள்ளுவதெல்லாம், மக்களுடைய வேண்டுகோளை அவமதித்து, எங்கள் சகிப்புத்தன்மையையும், பொறுமையையும் கோழைத்தனம் என்று கருதுவீரானல், அவரை சட்டசபையிலேகூட இனி நுழையவிட மாட்டோம் என்பதுதான். வேண்டுமானல் நீர் துப்பாக்கி முனையை எங்கள் முன் நீட்டலாம். துப்பாக்கி முனை எங்களை என்ன செய்யும்? அதன் விளைவுகளையெல்லாம் நாங்கள் ஏற்கனவே அனுபவித்துவிட்டோமே?

“சென்னை மாநிலத்திற்குத் ‘தமிழ் நாடு’ என்று பெயரிடுவது மத்திய சர்க்காரிடம்கூட இல்லை; மாநில சர்க்காரிடம் தான் இருக்கிறது. எனவே, இந்த மசோதாவைத் திருத்தியாக வேண்டும். ஆனல் மசோதா கொண்டுவரப்படும் முன்னமேயே, மசோதாவை ஆதரித்து வாக்குப்போட வேண்டுமென்று காங்கிரஸ் உறுப்பினர்களுக்கு உத்திரவிடப்பட்டாகி விட்டது. என்ருலும், நாம் கேட்கிறோம் அவர்களை—‘திருத்தத்தை ஆதரித்து வாக்குச் செய்யுங்கள்’ என்று; மறுத்தால், எதிர்காலமும், நாடும், நாட்டு மக்களும் உங்களை சும்மாவிட்டு வைக்கப் போவதில்லை என்பதையும் தெரிவித்துக்கொள்கிறோம்.

“இவ்வளவும் நாம் கேட்பது காமராசரை அல்ல; முதல் மந்திரியை! கேட்டது மக்கள் சக்தி என்பதையும் நாம் தெரிவித்துக்கொள்கிறோம்.”

## கண்டிப்பான பதில்!

சர்க்கார் ஊழியர்களுக்கு நிதி அமைச்சர் கைவிரிப்பு?

சென்னை, மார்ச். 27—

மாநில சர்க்கார் சிப்பந்திகளின் சம்பளத்தை மத்திய அரசாங்கச் சிப்பந்திகளின் சம்பள அளவிற்கு உயர்த்துவது எந்தச் சமயத்திலும் சாத்தியமானதாக இருக்காது என்றே எண்ணுகிறேன். என்ருலும், குறைந்த சம்பளம்பெறும் மாநில சர்க்கார் சிப்பந்திகளுக்கு நிவாரணம் அளிக்கும் பிரச்சினையை, நிதி நிலைமை சாதகமாக இருக்கும்போது, அவர்களுக்கு முன் சலுகைகாட்டி அளிப்பதற்கு சர்க்கார் கவனம் செலுத்தும்” என்று, நிதி அமைச்சர் சுப்பிரமணியம், சட்டசபையில் கேள்வி ஒன்றுக்குப் பதிலளிக்கையில் கூறியுள்ளார்.

‘சர்க்கார் ஊழியர்களின் சம்பளத்தை மத்திய சர்க்கார் ஊழியர்களின் சம்பள அளவுக்கு உயர்த்தியோ, பாகுபாட்டைக் குறைத்தோ நடவடிக்கை எடுப்பதற்கு மத்திய சர்க்காரிடம் மாநில சர்க்கார் உதவி கோரியிருக்கிறதா? என்ற கேள்விக்கு, ‘இல்லை’ என்ற பதில் தந்த அமைச்சர் ‘மாநில சர்க்கார் சிப்பந்திகளுக்கு அதிகச் சம்பளம் தரும் பொறுப்பு மாநில சர்க்காருடையதாகும்; நிதி நிலைமையைப் பொறுத்ததாகும்; சம்பளத்தை உயர்த்தினல் வரிப்பளுவை அதிகப்படுத்தித்தான் அதைச் சரிக்கட்டமுடியும்’ என்றும் குறிப்பிட்டுள்ளார்.

## முதலமைச்சர் முகத்தில் கரிபூச்சு

[1-ம் பக்கத்தின் தொடர்ச்சி]

அப் பொது உத்தரவிற்குக் கீழ்ப்படிந்து நடக்க பம்பாய் சட்டசபையில் உறுப்பினர்களாக உள்ள மாராட்டிரர்கள் பெருந்தொகையினர் மறுக்க முன்வந்துள்ளனர்.

மசோதாவை எதிர்த்துப் பேசப் போவதுடன், எதிர்த்தும் வாக்களிப்பது என இருபத்தைந்து உறுப்பினர்கள் தீர்மானித்து விட்டனர்.

பம்பாய் நகரை புதிய மாராட்டிர மாகாணத்தின் தலைநகராக ஆக்கவேண்டும் என்ற ஒரு திருத்தத்தையும் கொண்டுவர பத்தொன்பது உறுப்பினர்கள் தூளுரைத்து விட்டனர்.

மசோதாவிற்குச் சாதகமாக வாக்களிப்பது என பத்தே பத்து உறுப்பினர்கள் ஒப்பியுள்ளனர் என அறிவிக்கப்பட்டிருக்கிறது.

எஞ்சிய மாராட்டிர உறுப்பினர்கள், மசோதாவிற்கு ஆதரவாக வாக்களிப்பதிலிருந்து தங்களுக்கு விலக்களிக்க வேண்டுமெனக் கோரி, மாராஷ்டிர மாகாண காங்கிரஸ் தலைவரின் அனுமதியைப் பெற்றும் விட்டனர்.

மாகாணப் புனரமைப்பு மசோதா மீது கொள்ளப்பட வேண்டிய ஒருமைக் கருத்தை உருவாக்குவதற்காக, மாராட்டிர காங்கிரஸ் சட்டசபை உறுப்பினர்களின் கூட்டம், மா. கா. தலைவர் தலைமையில் கூடியது.

கூட்டத்தில் தலைவர், காங்கிரஸ் மேலிடத்துக் கட்டளையை எடுத்து விளக்கி, காங்கிரஸ் கட்சியின் மதிப்பையும், ஒற்றுமையையும் காப்பாற்றுக்கருத்துடன், மசோதாவை எதிர்க்காது ஆதரித்து வாக்களிக்கும்படி உறுப்பினர்களை உருக்கமாக வேண்டிக்கொண்டார்.

‘எதிர்க்காதீர் — திருத்தம் கோராதீர்’ எனக் கெஞ்சினர், மாராட்டிர காங்கிரஸ் தலைவர்.

‘முடியாது’ என கன்னத்தில் அறைந்ததுபோல் மாராட்டிர உறுப்பினர்களில் பெரும்பாலோர் பதில் தந்து விட்டனர்.

காங்கிரஸ் மேலிடத்துக் கட்டளையைக் கண்டித்தும், பம்பாய் நகரத்தை இந்திய அரசாங்கத்தில் நேரடி ஆட்சிக்குக் கொண்டுவரும் ஏற்பாட்டை எதிர்த்தும், கட்சிக் கூட்டத்தில் பெரும்பாலான உறுப்பினர்கள் ஆத்திரத்துடன் பேசி உள்ளனர்.

மசோதாவை எதிர்க்கக் கங்கணங்கட்டிக்கொண்டுள்ள சட்டசபை உறுப்பினர்கள் பெரிதும் கடலோரக் கொங்கணத்தைச் சேர்ந்த கொலாபா, இரத்தினகிரி மாவட்டங்களைச் சேர்ந்தவர்களாவர்.

மேற்குக் காண்டேஷ் மாவட்டத்தைச் சேர்ந்த தவுலியா தொகுதி சட்டசபை காங்கிரஸ் உறுப்பினரான என். எ. படீல் என்பவர், சட்ட சபையிலேயே மசோதாவை எதிர்த்து வாக்களிக்கப்போவதாக அறிவித்துள்ளார்.

பம்பாய் நகரை மகாராட்டிர மாகாணத்துடன் இணைக்கவேண்டும் என்றத் திருத்தத்தைக் கொண்டுவர இருப்பவர் இரத்தினகிரி பகுதியைச் சேர்ந்த பி. கே. சவான் என்ற பெயரிய காங்கிரஸ் சட்டசபை உறுப்பினராவார்.

‘மசோதாவிற்கு எதிராக காங்கிரஸ் உறுப்பினர்கள் வாக்களிப்பது என்பது கட்சிக் கட்டுப்பாட்டைக் குறைப்பதாகும்’ என்று சட்டசபையில் எச்சரித்திருக்கிருர்

அவர் கொக்கரிப்புக்கு, மகாராட்டிர உறுப்பினர்கள், வருகிற சனிக்கிழமைதினம் தக்கவாறு செயலளவில் பதிலளிக்கக் காத்திருக்கிறனர்!

## தமிழின் தகுதியும்...

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

“எல்லா மாநிலங்களும் தங்கள் தங்கள் மாநிலத்திலுள்ள எல்லாப் பள்ளிகளிலும் ஆங்கிலமே கட்டாய இரண்டாவது மொழியாகவும், கல்லூரிகளிலெல்லாம் இரசாயன, தொழில்துறைகளில் போதனு மொழியாக ஆங்கிலத்தையே வருகிற 1965 வரையிலும் கையாண்டு வந்தால் நாடு முழுவதிலுமாக ஆங்கில மொழி தேவையான அளவிற்கு நல்லமுறையில் பயன்படுத்த ஏதுவாகும். அவ்வாறு ஆகும்போது, ஆங்கில மொழி, இந்தியாவின் பல பாகங்களுக்கிடையேயும் செய்திப் போக்குவரத்துப் போன்ற தொடர்புகளுக்குத் தேவையான ஒரு பொது மொழியாகவும், 1965-க்குப் பின்னர், நாடு முழுவதிலும் ஒரு துணை அலுவல் மொழியாகவும் ஆகிவிடும் நிலை பெற்றுவிடும்.”

இடைநிலைக் கல்வியை முடித்து வெளிவரும் மாணவர்களுக்கு கடந்த சில வருடங்களாக, ஆங்கில மொழித்தேர்வு குறைவு குறித்து அவ்‘வெள்ளை அறிக்கை’யில் குறிப்பிடப்பட்டிருப்பதாவது:—

“மாணவர்கள் இவ்வாறு ஆங்கிலப் பயிற்சியில் குறைந்த தேர்ச்சி பெற்றிருந்ததால் பொது அலுவலகங்களில் குமாஸ்தா வேலைக்குத் தேவையான அளவு ஆங்கில அறிவு பெற்றவர்கள் கிடைக்க முடியாமல் போய்விட்டது. மேலும், கல்லூரிப் படிப்புப் பெற்று வெளிவந்தவர்கள் கூட, ஆங்கிலத் தேர்ச்சி குன்றியவர்களாகவேதான் கடந்த சில ஆண்டுகளாக இருந்து வருகின்றனர். தேர்ச்சி குன்றியிருப்பது மட்டுமல்லாமல், பொது அறிவுத் துறையிலும் மழுங்கிப்போகும் அளவிற்கு அவர்களுடைய அறிவு குன்றி விட்டது. இதனல், பொது நிர்வாகத் துறைகளிலும், அறிவு முதிர்ச்சி பெற்றோருக்கான தொழில் துறைகளிலும் தேவையான அளவு மாணவர்கள் கிடைக்க முடியாமலாகி விட்டது!”

“இதற்கு முக்கியமான காரணங்களில் ஒன்று, ஆங்கிலத்தையும்விட தாய் மொழிக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படவேண்டும் என்று எழுந்துள்ள நிலைமைதான்.”

---

மேற்குப் பாகிஸ்தானிலிருந்து இடம் பெயர்ந்து வந்துள்ளவர்களுக்கு 1956-57-ல் நஷ்டஈடு வழங்குவதற்காக இந்திய சர்க்கார் ரூ. 559 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கின்றனர்.

## ஆடத்தெரியாதவள்.........

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

தனது அறியாமையை மறைக்க முயற்சித்தார்.”

துவக்கப்பள்ளியில் கல்வித்தரம் குறைந்திருக்கிறது என்பதை, ஆந்திர சட்டசபையில் எடுத்துக் கூறிய, பாபுரு ராமாசார்லு என்ற காங்கிரஸ் உறுப்பினர், மேற்கூறிய சம்பவத்தைச் சுட்டிக்காட்டினர்.

## வருந்துகிறோம்

சென்னை நில வருமான அமைச்சர் மாணிக்கவேலரின் மூன்ருவது குமாரர் 28 வயது நிரம்பப்பெற்ற விசுவநாதன் அவர்கள், 25—3—56ல், படகு விபத்தில் தண்ணீரில் மூழ்கி இறந்துவிட்டமைக்குப் பெரிதும் வருந்துகிறோம். நமது ஆழ்ந்த அனுதாபம் உரித்தாகுக!

(ஆ-ர்)

## கழகக் கூட்டம்

★

குடவாசல்:
கடைத் தெருவில்
30—3—56 வெள்ளிக்கிழமை

தலைவர்:
பி. டி. அரசு

பேசுவோர்:
இரா. நெடுஞ்செழியன்
என். எஸ். இளங்கோ

பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்களுக்கு வரவேற்பு அளிக்கப்படும்.

---

பொதுச்செயலாளர்

## இரா. நெடுஞ்செழியன்

சுற்றுப்பயணம்

★

29: செயங்கொண்டம்
30: குடவாசல்
31: திருச்சி
எப். 1: ,,
2: ,,

## இரவு பள்ளி நிதிக்காக சிறப்புச் சொற்பொழிவு

“15—4—56 ஞாயிறு மாலை 5 மணிக்கு, கோகலே மண்டபத்தில், தாங்கல்-திருவொற்றியூர் இரவு பள்ளி நிதிக்காக அண்ணு அவர்களும், மற்றும் தோழர்கள் பலரும் சிறப்புச் சொற்பொழிவாற்றுவர்,” என்று, அமைப்பாளர் ஏ. வி. ஆறுமுகம் அறிவிக்கிருர்.

### சொற்பயிற்சிக் கூட்டம்

29—3—56 இரவு 8 மணியளவில், சென்னை — ஆள்வார்பேட்டை 46-வது வட்ட தி. மு. கழகப் பணிமனையில் ‘மக்களும் - மதமும்’ என்ற தலைப்பில் சொற்பயிற்சிக் கூட்டம் தோழர் இரா. அகமழகன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் பலர் பேசுவர்.

### தமிழ் நூல் பரிசளிப்பு விழா

30—3—56 மாலை 6 மணிக்கு, தமிழ் வளர்ச்சிக் கழகச் சார்பில், எட்டாவது தமிழ் நூல் பரிசளிப்பு விழா சென்னைப் பல்கலைக்கழக ‘செனெட்’ அறையில் நடைபெறும். அவ்வமயம், சிறந்த நூல்களுக்குப் பரிசுகளும், பரிசுப் பத்திரங்களும் பாராட்டுப் பத்திரங்களும் வழங்கப்பெறும். திரு. சி. ஆர். சீனிவாசன் விழாவிற்குத் தலைமை வகிக்கவும், டாக்டர் இராம. அளகப்பசெட்டியார் பரிசுகளை வழங்கவும் இசைந்துள்ளார். திரு தெ. பொ. மீனுட்சிசுந்தரம் (பிள்ளை), அமைச்சர் சி. சுப்பிரமணியம் சொற்பொழிவாற்றுவர்.

### பொதுத் தேர்தல்: எல்லா இடங்களும் முன்னணிக்கே

டுனீசியா அரசியல் நிர்ணய சபைக்கு நடைபெற்ற பொதுத் தேர்தலில், மொத்த இடங்கள் 98-யும் தேசிய முன்னணியினரே கைப்பற்றியுள்ளனர்.

மொத்தவாக்காளர்கள் 7,26,000 பேரில் 90 சத விகிதத்தினர் வாக்குப் பதிவு செய்தனராம். 21 வயதான ஆண் பாலர் அனைவருக்கும் வோட்டுரிமை உண்டு. மகளிருக்கு வோட்டுரிமை கிடையாது.

முன்னணிக் கட்சித் தலைவரான ஹாபி பர்குவா தனது தொகுதியின் 23,673 வாக்குகளையும், தானே பெற்றுவிட்டாராம்.

கடந்த 74 ஆண்டுகளாக பிரெஞ்சு ஆட்சிக்குட்பட்டிருந்த டுனீசியாவில், சுதந்திரம் மலரச் செய்வதில், முன்னணியினர் பெரும் பணியில் ஈடுபட்டனர்.

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப் பெற்று, (24 சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

